28th April 1960]

THE HON. SRI P. KAKKAN : கிராமங்களில் இருக்கும் குடிநீர் தேக்கங்களைப் பாதுகாக்க அங்கங்கே உள்ள பஞ்சாயத்துகள் சிப்பந்திகளை நியமித்து இருக்கிறார்கள். அவர்கள் நல்ல முறையில் ஓரளவு பாதுகாத்து வருகிறார்கள்.

SRI A. A. RASHEED: Sir, is the Hon. Minister aware that the Buckingham canal is polluted by the sewage let into it? If so, what steps have been taken by Government to prevent this pollution?

THE HON. SRI P. KAKKAN: Steps are taken to examine this.

*Compulsory Education*

* 847 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of **Sri M. P. Sarathy**) : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கட்டாயக் கல்வி முறை (Compulsory Education) அமுலிலுள்ள பிரதேசங்களில் மீறும் பெற்றோர்கள் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது?

(ஆ) கட்டாயக் கல்வியை தீவிரமாக்க என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) There is provision in the rules under the Madras Elementary Education Act to let off the parent or guardian concerned with a warning for the first breach of the obligation to send the child to school and to levy fines between certain prescribed minima and maxima for the second and subsequent breaches. This provision has not however been enforced very strictly.

(*b*) The Government propose to introduce compulsory primary education for the age-group 6-11 years throughout the State by the end of Third Plan period and are taking necessary steps towards that end. The scheme will be implemented according to a phased programme starting from 1960–61.

SRI A. VEDARATHNAM : சார், இந்தக் கட்டாயக் கல்வி அமுல் இருக்கிற பிரதேசங்களில் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பாத பெற்றோர்கள் கல்வி அறிவு இல்லாத காரணத்தினால் அதன் அருமையைத் தெரிந்துகொள்ளாததுதான் அனுப்பாமல் இருக்கிறார்கள். அவர்களுக்கு அபராதம் போடுவது தவறு என்று அரசாங்கம் நினைக்குமானால் அங்கே இருக்கிற முதியோர் பள்ளிக்கூடங்களுக்கு ஆறு மாதம் அல்லது மூன்று மாதம் அந்தப் பெற்றோர்கள் போகவேண்டும் என்ற குறைந்த பட்ச தண்டனையாவது விதிக்க முன்வருவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தச் சட்டத்தின் கீழ் அப்படிச் செய்ய முடியாது. புதுச் சட்டம்தான் அதற்காகப் பண்ணவேண்டும்.

SRI K. ANBAZHAGAN : 1960-61-ம் ஆண்டில் இருந்து 6 வயது அல்லது 7 வயது குழந்தைகள் பள்ளிகளில் சேர்க்கக்கூடிய நேரத்தில் பல கிராமங்களிலிருந்து பள்ளிகள் ஒரு மைல்

[28th April 1960

அளவிற்குள் இல்லாததினுல் அவர்கள் பள்ளிக்குப் போக முடியாமற் போகலாம். ஆகையால் ஒவ்வொரு கிராமங்களிலிருந்தும் ஒரு மைலுக்குள் புதிதாக பள்ளிகளை ஏற்படுத்துவதற்கு அரசாங்கத்திடம் ஏதாவது திட்டம் இருக்கிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: எனக்குத் தெரிந்தவரையில் ஒரு மைலுக்குள்ளாகதான் பள்ளிகள் இருக்கின்றன. அப்படி குறிப்பிட்ட இடத்தில் இல்லை என்ருல் புதிய பள்ளிகள் அமைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

SRI N. K. PALANISAMY: சென்னையில் 26 வருடங்களாக கம்பல்சரி எட்யூகேஷன் இருக்கிறது. இதுமாதிரியாக பள்ளிகளிலும் மத்தியான உணவு கொடுக்கிருர்கள், புஸ்தகம் வாங்கிக் கொடுக்கிருர்கள், அப்படியிருந்தும் 100-க்கு 85 விதம்தான் பள்ளிகளுக்கு பிள்ளைகள் வருகிருர்கள் சென்னை நகரத்திலேயே . .

MR. SPEAKER: The hon. Member is making a speech. Let him put the question. கனம் அங்கத்தினர் கேட்கவேண்டிய கேள்விகளை சுருக்கமாக கேட்கவேண்டும். நேற்றைய தினம் மான்யத்தின் மீது பேச வேண்டியதை இப்பொழுது பேசுகிருர்களே?

SRI N. K. PALANISAMI: சென்னையிலே அந்த நிலைமை என்ருல் கிராமங்களில் எவ்வளவு பேர்கள் வருவார்கள்?

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்போது பல கிராமப் பகுதியிலேயேகூட நிர்ப்பந்தமில்லாமல் சட்டம் இல்லாமல் 100-க்கு 100 மக்களிடையே தங்களுடைய குழந்தைகளை படிக்கவைக்க வேண்டும் என்ற உணர்ச்சி இருக்கிறது. ஆண் பிள்ளைகள் 100-க்கு 95 பேர் வருகிருர்கள். பெண்கள்தான் அதிகம் வருவதில்லை. ஆனல் இப்பொழுது பெண்களும் அதிகமாக வரத்தொடங்கியிருக்கிருர்கள்.

*Thiruvathiyan lake*

* 848 *Q*.—SRI S. THANGAVELU: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா

(அ) கடலூர் தாலூக்காவில் பன்ருட்டி அருகில் திருவதியான் ஏரியும், மேற்படி ஏரி வாய்க்கால் வாலாஜாவும் மராமத்து செய்ய சர்க்காரிடத்தில் திட்டம் பரிசிலனையில் இருக்கிறதா?

(ஆ) அப்படியானல் எப்பொழுது?

(இ) வாலாஜா வாய்க்கால் வெட்ட செலவான ரூபாய் எவ்வளவு?

(ஈ) இந்த வாலாஜா வாய்க்காலை மராமத்து செய்வதால் எத்தனை கிராமங்களுக்கு, எத்தனை ஏக்கர் சாகுபடி ஆகும்?

THE HON. SRI P. KAKKAN: (*a*) Yes, Sir.